Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**அமைதி**

அமைதியிலே இரண்டு வகை உண்டு. ஒன்று விவரம் தெரியாமலிருக்கிற அமைதி. இன்னொன்று எல்லா விவரங்களையும்தெரிந்திருக்கிற அமைதி.

-பேறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**தன்மானம்**

தன்மான உணர்வுக்கு பாதகமாயின எவையோ அவையனைத்தையும் மாற்றுவதே உண்மையான தன்மான இயக்கத்தின் நோக்கம்.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை 20-1-83 வியாழன் வெளியூர் 21-1-83 வெள்ளி இதழ்: 93

## புரட்சித்தலைவர் முன்னிலையில் இணைந்தார்

# கழகத்தில் எட்மண்ட்





தி.மு.கவிலிருந்து விலகிமுதல்வா புரட்சித்தலைவா முனனிலையில் முன்னாள் அமைச்சர் எட்மண்ட் கழகத்தில் இணைந்தபோது எடுத்த படம். அமைச்சர் பொன்னையன் மற்றும் கழகத் தோழர்கள் உடன் உள்ளனர்.

## கருணாநிதி மீது கடும் குற்றச்சாட்டு

சென்னை, ஜன. 20- முன்னாள் அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட், தி. மு. க. வில் இருந்து விலகி முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் இனறு கழகத்தில் இணைந்தார்.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு அவர் ஜவ்வாது மாலை அணிவித்தார்.

அப்போது அமைச்சர் பொன்னையன் அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றப் பொதுச் செயலாளர் திருச்சி ஆர். சவுந்தரராசன் நெல்லை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் பாளை எஸ். நாராயணன் மற்றும் நெல்லை மாவட்டக் கழகத் தோழர்கள் உடனிருந்தனர்.

கழகத்தில் இணைந்துள்ள எட்மண்ட் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

இன்று (20—1—83) காலை 9-மணிக்கு மீண்டும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தில் புரட்சித் தலைவர் முன்னிலையில் என்னை இணைத்துக் கொண்டேன் என்பதை மகிழ்ச்சியுடனும், பெருமிதத்துடனும் தமிழ் மக்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கருணாநிதி அவர்கள் புரட்சித்தலைவரை கட்சியிலிருந்து 1972ல் வெளியேற்றியபோது புரட்சித் தலைவரின் அணியில் முதன் முதலாகச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர்களில் நானும் ஒருவன் என்பதை நாடு நன்கு அறியும்.

புரட்சித்தலைவர் அவர்கள் எனக்கு காட்டிய அன்பு ஆதரவு அளித்து—பதவி கவுரவம் கொடுத்த மதிப்பு, மரியாதை இவைகளை நினைத்து என் நெஞ்சம் நெகிழ்ச்சி அடைகிறது.

கருணாநிதியால் தூக்கி எறியபபட்ட புரட்சித் தலைவர் அவர்கள் அண்ணா தி. மு. க. வை துவக்கி இராவிட்டால் அண்ணாவின் கொள்கைக்கு எவ்வளவு பெரிய ஆபத்து ஏற்பட்டு நமது திராவிடர் இயக்க வரலாற்றில் அகற்ற இயலாத ஊனம் ஏற்பட்டிருக்கும் என்பதை கழகக் கண்மணிகள் நன்கு அறிவார்கள்.

உள்ளத்தால் உணர்வால் கொள்கையால் கோட்பாட்டால் எண்ணத்தால் இதயசுத்தியால் புரட்சித் தலைவருடன் ஒன்றிப் போய் இருக்கும் எனக்கு இடையில் ஏற்பட்டுள்ள நிகழ்ச்சிகள் யாவும் கெட்ட கனவே!

### அந்தக்காலம் இருண்டகாலம்

அந்த நிகழ்ச்சிக்காக பெரிதும் வருந்துகிறேன் அண்மைக் காலத்தில் கருணாநிதி அவர்களுடன் இருந்த காலத்தை இருண்ட காலமாக எண்ணி வருந்திடும் காலமாகக் கருதுகிறேன்.

அவருக்கு இன்று அண்ணாவின் கொள்கை திராவிடர் பாரம்பரியம் இவற்றைக் காப்பாற்ற வேண்டும் என்பதில் இருக்கும் அக்கறையை விட, எந்த தவறான வழியை மேற்கொண்டும் அண்ணா தி. மு. க. வை அழிக்க வேண்டும். குறிப்பாக புரட்சித்தலைவரின் செல்வாக்கை சிதைக்க வேண்டும் என்ற ஒரே தியநோக்குடன் செயல்படுகிறார்.

### கருணாநிதியின் சுயநலப் போராட்டம்

இந்த சுயநலப் போராட்டத்தில் நான் பங்கு கொள்ள விரும்பவில்லை. இந்த சூதுமதிக்கு உடந்தையாக இருக்க என் உள்ளம் இடம் கொடுக்கவில்லை.

எனவே எந்த சோதனை வந்தாலும் தன்னைப் பற்றியோ தன் குடும்பத்தைப் பற்றியோ சிறிதும் கவலை கொள்ளாமல் தன்னுடைய உயிரைக் கொடுத்தாவது அண்ணாவின் லட்சியங்களை நிறைவேற்றியே தீருவேன் என்று சபதம் எடுத்து முனைப்புடன் செயல்படும் புரட்சித் தலைவரின் தலைமையில் உள்ள இயக்கத்தில் என்னை இணைத்துக்கொண்டேன்

வழக்கம்போல் அன்புக்கரம் நீட்டி என்னைத் தம்பியாக ஏற்றுக் கொண்ட நமது இதய தெய்வம் புரட்சித் தலைவர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அவரது விழுமிய தலைமையில் என்றும் தூய தொண்டனாய் பணி செய்வேன் என்று இதன் மூலம் உறுதி அளிக்கிறேன்.

இவ்வாறு அந்த அறிக்கையில் ஜி. ஆர். எட்மண்ட் கூறியுள்ளார்.

★ தமிழக குடிசைவாழ் மக்களின் வீட்டுப் பிரச்சினைக்கு நேர்மையாக - வெற்றிகரமாக தீர்வு

# தமிழக குடிசை மாற்று வாரியத்துக்கு சுப்ரீம்-கோர்ட்டில் பாராட்டு

புதுடெல்லி, ஜன 20- தமிழகத்தில் குடிசைவாசிகளின் வீட்டுப் பிரச்சினை நேர்மையாகவும், வெற்றிகரமாகவும் தீர்க்கப் படுகிறது என்று சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் பாராட்டுத் தெரிவித்துள்ளனர்.

பம்பாய், சென்னை குடிசைவாசிகள் சம்பந்தப்பட்ட வழக்கு ஒன்று சுப்ரீம் கோர்ட்டில் விசாரணைக்கு வந்தது.

சுப்ரீம்கோர்ட் பெஞ்ச் ஒன்று இதுபற்றி விசாரணை செய்தது.

தலைமை நீதிபதி சந்திரசூட் நீதிபதிகள் முர்துசா பசல் அலி துல்சாபுர்கார், சின்னப்ப ரெட்டி,வரதராஜன் ஆகியோர் கொண்ட பெஞ்ச் விசாரித்தது.

அப்போது சுப்ரீம் கோர்ட் பெஞ்ச் நீதிபதிகள் தமிழக குடிசை மாற்று வாரியப் பணிகளுக்கு பாராட்டு தெரிவித்தனர்.

தமிழகத்தில் குடிசைவாழ் மக்களது வீட்டுப் பிரச்சினைகள் நேர்மையாகவும், வெற்றிகரமாகவும், தீர்க்கப்படுகிறது என்று நீதிபதிகள் குறிப்பிட்டனர்.

குடிசைவாழ் மக்களுக்கு பயன் தரும் திட்டத்தை தமிழகம் செயல்படுத்தி வருகிறது என்றும் நீதிபதிகள் கூறினார்கள்.

குடிசை மாற்று வாரியத்தின் சார்பில் சுப்ரீம் கோர்ட்டில் ஒருபிரமாண பத்திரம் தாக்கல் செய்யப்பட்டது.

குடிசைவாழ் மக்களது அபிவிருத்துக்காக வருகிற 4 ஆண்டு காலத்தில் ரூ. 19 கோடி செலவிட இருக்கிறது என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

குறைந்த வருவாய்க்காரர்களுக்கு தவணைமுறையில் வீடுகள் தரப்படுகின்றன என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

குடிசைமாற்று வாரியம் இதுவரை ரூ. 35 கோடி செலவில் 38 ஆயிரம் குடியிருப்புகள் கட்டியிருப்பதாகவும் ஆண்டுக்கு ரூ. 5 முதல் 6 கோடிவரை செலவிட்டு வருவதாகவும் கூறப்பட்டுள்ளது.



### வாடகை

ஒரு வீட்டுக்கு ரூ. 14 ஆயிரத்தில் இருந்து ரூ. 16 ஆயிரம் வரை செலவு ஆகிறது. இதற்கு நியாய வாடகை ரூ. 105 வசூல் செய்ய வேண்டும். ஆனால் ரூ.20 தான் வாடகை வசூல் செய்யப்படுகிறது.

95 ஆயிரத்து 414 குடும்பங்கள் பல்வேறு திட்டங்களால் நன்மை பெற்று வருவதாகவும் பிரமாண பத்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

**கத்தியைக் காட்டி**

**கொள்ளையடித்த**

### வாலிபர் தடுப்புக்காவலில் வைக்கப்பட்டார்

சென்னை. ஜன. 20— கத்தியைக்காட்டி மிரட்டி கொள்ளை அடித்த மாரி என்கிற மாரிமுத்து தடுப்புக்காவலின் கீழ் ஓராண்டு சிறையில் வைக்கப்பட்டார். இவருக்கு வயது 21.

இவர் புளியந்தோப்பைச் சேர்ந்தவர், ஏற்கனவே இரண்டு ஆண்டுகள் இளங் குற்றவாளிகள் சீர்திருத்த சிறையில் இருந்தவர்.

6 வழக்குகளில் சம்பந்தப்பட்ட இந்த ஆசாமி ஒரு வியாபாரியிடம் கத்தியைக் காட்டி மிரட்டி மோதிரம், வாட்சைப் பறித்த போது பிடிபட்டார். இப்போது தடுப்புக் காவலில் வைக்கப்பட்டுள்ளார்.

**திருச்செந்தூர் தேர்தல் தேதி:**

**அதிகாரபூர்வ அறிவிப்பு வரவில்லை**

# அதிகாரி பேட்டி

சென்னை, ஜன. 20- திருச்செந்தூர் இடைத்தேர்தல் தேதி பற்றி இன்னும் அதிகாரபூர்வ அறிவிப்பு வரவில்லை என்று தமிழக தலைமைத் தேர்தல் அதிகாரி ஓசா கூறினார்.

தமிழகதலைமைத்தேர்தல் அதிகாரி டி,கே. ஓசா நிருபர்களிடம் கூறியதாவது:

திருச்செந்தூர் சட்டசபைத் தொகுதிக்கான இடைத்தேர்தல் வரும் பிப்ரவரி மாதம் 27-ம் தேதிநடத்தலாமா என்று மத்திய தேர்தல் குழுவைக்கேட்டுஇருந்தோம்.

அந்தத் தேதி அநேகமாக ஏற்றுக் கொள்ளப்படும். அது பற்றி அதிகாரப் பூர்வமான அறிவிப்பு இன்னும் இரண்டொரு நாட்களில் வந்துவிடும்.

நாடு முழுவதும் பல இடங்களில் இடைத் தேர்தல்கள் ஆங்காங்கே நடத்தப்பட இருக்கிறது.

இதை ஒட்டி திருச்செந்தூர் இடைத்தேர்தலும் பிப்ரவரி 27-ம் தேதி வைக்கலாம் என்பது அநேகமாக ஏற்றுக் கொள்ளப்படும் எனத் தெரிகிறது.

இந்தத் தொகுதியில் ஒருலட்சத்து 32ஆயிரத்து 757 வாககாளர்கள் இருக்கிறார்கள்.

154 வாக்குச்சாவடிகள் வைக்கப்பட இருக்கின்றன.

இந்தத் தொகுதிக்கான வாக்காளர் பட்டியலில் புதிதாகயாரையும் சேர்ப்பதற்கில்லை.

1982ம் ஆண்டு ஜனவரி முதல் தேதியில் யார் யார் 21 வயது பூர்த்தியாகி இருக்கிறார்களோ அவர்களை வாக்காளர் பட்டியலில்சேர்க்கப்பட்டதோடு சரி.

அவர்கள் தான் இந்தத் தேர்தலில் வாக்களிப்பார்கள்.

ஒவ்வொரு ஆண்டும் ஜனவரிமுதல் தேதியன்று வாக்காளர் பட்டியல் இந்தியா முழுவதும் திருத்தப்படுகிறது.

ஆனாலும் திருச்செநதூரை பொறுத்தவரை கடந்த ஆண்டு வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்பட்டவரைதான் நீடிக்கும்.

அவர்கள்தான் இந்த தேர்தலில் வாக்களிப்பார்கள்.

இவ்வாறு ஓசா கூறினார்.

**தமிழக லாட்டரி முடிவுகள்:**

# வாணியம்பாடி-சேலத்திற்கு முதல் பரிசு ரூ. 1 லட்சம்

சென்னை. ஜன. 20- தமிழக அரசு லாட்டரி குலுக்கலில், வாணியம்பாடி, சேலத்தில் விற்ற சீட்டுகளுக்கு 1 லட்ச ரூபாய் பரிசு கிடைத்துள்ளது.

தமிழ்நாடு லாட்டரி 95-வது குலுக்கல் இன்று சங்கரதாஸ் சுவாமிகள் கலையரங்கில் நடந்தது. குலுக்கல்முடிவு வருமாறு:

**கே. யூ. வரிசை**

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
**192063**
(சேலம்)

2-வது பரிசு
ரூ. 10 ஆயிரம் வீதம்
071231
(கோவை)
610928
விருதுநகர்

3.வது பரிசு
ரூ 5 ஆயிரம் வீதம்:
670791
கோவை
609619
(விருது நகர்)

4-வது பரிசு
ரூபாய் ஆயிரம் வீதம்
455690 271855

080619 318139
447827 004637
691850 497817
429710 005888
065343 075940
781973 725331
983735 808337
482824 651296
374137 431185
900759 947828
043339 043772
199068 374789
975368 373955
698697 700581
205170 804917
572840 821697
200567 957619
556224 298874
727434 389161

5-வது பரிசு
ரூ. 500 வீதம்
கீழ்க்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு
16741 14545
87418 01716
72816

6-வது பரிசு
ரூ. 100 வீதம்
கீழ்கண்ட எண்களில்

(2-ம் பக்கம் பார்க்க)

# இளந்துறவியே எழுந்து வா!

'கழகத்திற்குத் தொண்டாற்றும்போது தொண்டர்களின் உடல்நிலை பற்றியும் நான் அக்கறை கொள்வேன்...'

—பேரறிஞர் அண்ணா இப்படிச் சொல்லியிருந்தால் 'அண்ணா நீங்கள் சொல்லித்தானா நாங்கள் இதைத் தெரிந்து கொள்ளவேண்டும் — நீங்கள் உங்கள் தேக நலத்தை மறந்து இந்தத் தேச நலத்திற்குப் பாடுபட்டவரல்லவா? என்று சொல்வோம்!

அண்ணா வழியில் அடிமாறாமல் தொடரும் அவரது இதயக்கனி புரட்சித்தலைவர் சொல்லியிருந்தால் — 'கட்சி வளர்ச்சிக்காகப் பாடுபட்டவர்கள் கஷ்டப்படுகிறார்கள்-கண்ணீர் வடிக்கிறார்கள்' என்று கேள்விப்பட்டவுடன் கவலைமிகக் கொண்டு அவர்களுக்கு வேண்டியதைச் செய்ய விரைந்திடும் வள்ளல் பெருமகனல்லவா நீங்கள்? என்று நாம் சொல்லி மகிழ்ந்திடுவோம்!

ஆனால்—

இந்தக் கருத்தைச் சொல்லியிருப்பவர் யார்?

கருணாநிதி!

சிறுத்தைப் புலியொன்று சிவகாருண்யம் பேசுகிறது.

கசாப்புக்கடை காதர்பாட்சா காந்தீயம் பற்றி அளக்கிறார்!

ஆதாரத்தோடு சொல்வதானால்—

★ பலபேருடைய உள்ளத்தை தன் சம்மட்டியடி வார்த்தைகளால் உடைத்து சுக்கு நூறாக்குபவர் கருணாநிதி!

★ உண்மையாக உழைக்கக் கூடிய பல பேருடைய உடல்நலத்தைக் கெடுத்து ஊனப்படுத்தும் வகையில் அவர்களைக் கசக்கிப் பிழிபவர் கருணாநிதி!

அப்படிப்பட்டவர் பேசுகிறார் அப்பாவியைப் போல!

அப்பாவு திருவுருவப்படத்திறப்பு விழா அவரது பேச்சு அரங்கேற்றத்திற்கு படிபோட்டுக் கொடுத்திருக்கிறது!

உள்ளத்தை உடைத்து நொறுக்குவது—

உடல் நலத்தைக் கெடுக்கச் செய்வது—

இந்த நிலைகளுக்கு ஒரு சில உண்மைச் சம்பவங்களையே கூட சான்றுகளாகச் சொல்லிவிட முடியும்!

திராவிட இயக்கத்தின் நெடிய வரலாற்றில் தன்னை இணைத்துக் கொண்டு இன்றளவுக்கும் எளிமையாகவே வாழ்ந்து கொண்டிருக்கிறவர் பெரியவர் சங்கரய்யா —

ஒரு முறை அவரது துணைவியார் உடல்நலம் கெட்டு ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட போது சங்கரய்யா கருணாநிதியை அணுகி ஏதாவது பொருளுதவி செய்யக் கோருகிறார்.

'ஊரான் வீட்டு பொண்டாட்டிக்கெல்லாம் உடம்பு சரியில்லேன்னா கட்சி என்ன செய்யும்?'

— கேட்டவரல்லவா கருணாநிதி?

கட்சிப் பணம் வேண்டாம்—உங்கள் முரசொலியில் கட்சிச் செய்திகளை தொகுத்துத் தந்து கொண்டிருந்த அவருக்கு உங்கள் சொந்தப் பணத்தையே அல்லவா தந்திருக்க வேண்டும்?

பணம் கூடத் தரவேண்டாம்! பாதரச வார்த்தைகளையாவது வீசாமல் இருந்திருக்கலாமல்லவா? பாம்பாய்ச் சீறினீர்கள் — விஷத்தைக் கக்கினீர்கள் உண்மையா, அல்லவா?

இதுமாதிரி ஒரு சங்கரய்யாவுக்கல்ல ஓராயிரம் பேருக்கு நேர்ந்ததுண்டு!

அன்றைக்கு உள்ளம் நொந்து போனவர்தான் புண்மனப் பேர்வழியை புறக்கணித்துவிட்டு பொன்மனச் செம்மலிடம் புகல் தேடி வந்தார்!

'முரசொலி' என்றாலே அடியார், இளந்துறவி போன்றவர்களின் பெயர்களை யாராலும் மறக்க முடியாது!

அப்படிப்பட்ட அடியார்—அடிவயிற்று அறுவை சிகிச்சைக்கு ஆளாகி ஆபத்தான நிலையில் மருத்துவ மனையில் கிடந்தபோது போய்ப் பார்க்காதவர் மாத்திரமல்ல, பார்த்துவிட்டு வந்தவர்களிடமும் நிலைமையைக் கேட்டறியாத கல்லுளி மங்கனல்லவா கருணாநிதி?

அது மட்டுமல்ல—

உதய சூரியனையே காண முடியாத அளவுக்கு இரவு பகலென்று பாராமல் உடனிருந்து பாடுபட்ட அடியாரை அவசரச் சட்டத்தின் கீழ் கைது செய்து உள்ளே தள்ளிய உத்தமரல்லவா கருணாநிதி?

இளந்துறவி என்றோர் இலட்சிய வெறிபிடித்த இனிய கவிஞன்—இதய நோய்க்காளாகி மருத்துவ மனையில் பல நாள் கிடந்தான். நண்பர்களைத் தவிர கேட்க நாதியில்லா நிலை! ஒரு முறையேனும் பார்க்க வந்தாரா இந்த அருட்செல்வர்!

இளந்துறவி அரசு பொது மருத்துவமனையில் இருந்து துடித்த அதே காலகட்டத்தில் 'அண்ணா' ஆசிரியர் பரசுராமன் உடல் நலக் குறைவால் ஸ்டான்லி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்தார்.

பரசுராமனைப் பார்க்க-அவரது உடல் நலனை விசாரிக்க அமைச்சர்கள் வந்தனர். போனில் விசாரித்தனர்.

அத்தனைபேரின் வாயிலாகவும் உடல் நலனைக் கேட்டறிந்து வந்த முதல்வர் புரட்சித்தலைவர் தமது பல்வேறு அலுவல்களுக்கு மத்தியிலேயும் மருத்துவமனைக்குச் சென்று பரசுராமனைப் பார்த்து உடல் நலம் விசாரித்தார், உற்றுழி உதவும் நற்செயலிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

எந்தப் பொறுப்பும் இல்லாத கருணாநிதி பொறுப்போடு தன்னிடம் பணியாற்றிய ஒருவனை-"இன்றைக்கோ நாளைக்கோ" என்றிருக்கும் ஒருவனைப் பார்க்க வரவில்லை.

"அண்ணா" ஆசிரியரை முதல்வர் பார்த்து வந்தார் என்ற செய்தி வந்த பிறகு-

"'இறைவா என் முடிவு இன்றோ நாளையோ அதற்குள் தங்களின் திருமுகம் காணத்துடிக்கிறேன். வருவீர்களா?'" என்று அந்த இதயநோயாளி கடிதம் எழுதியபிறகு—

வேண்டா வெறுப்போடு வந்து பார்த்தவர்—

ஆற்காடு வீராசாமியும், டாக்டர் கலாநிதியும் பண உதவி செய்கிறார்கள்! அவர்களுக்கு முந்திக் கொண்டு தாம் பண உதவி செய்ய வேண்டும் என்று நினைக்காதவர் — தொண்டர்களுக்காக நெஞ்சுருகப் பேசுவதை நீலிக்கண்ணீர் வடிப்பதைப் பார்க்கும்போது இந்த ஆண்டின் சிறந்த நடிகருக்கான தேசிய விருதை இவருக்கே தரலாம் போல் எண்ணத் தோன்றுகிறது!

கவிஞர் இளந்துறவி பிணமாகி மருத்துவ மனையில் கிடக்கிறான். உடனடியாக எடுத்துப் போகச் சொல்கிறார்கள்.

பொது மருத்துவ மனையிலேயிருந்து பட்டினப்பாக்கம் கொண்டு போக அந்த நள்ளிரவில் வண்டி வாகன வசதியில்லை. முரசொலிக்குத் தொடர்பு கொண்டு கேட்டபோது 'பார்சல் போகிற வண்டியில் பாடி (BODY)யைக்கொண்டு போகக்கூடாது' என்று மறுத்தவர்களின் குடும்பத்தலைவரா மகாத்மாவைப்போல வேஷம் போடுவது?

கழகத்திற்கு தொண்டாற்றுவோரின் உடல் நலம் பற்றி கவலைப்படுவேன் எனக் கூறும் கருணாநிதியின் முகமூடியைக் கிழிக்க— என் இனிய நண்பனே! இளந்துறவியே! எழுந்துவா!

## -:கவிஞர் மணிமொழி:-

---

## கழகத் தோழர் மறைவு

சென்னை, ஜன. 20— சென்னை 35-வது வட்டத்தைச் சேர்ந்தமதுரை பைரவன் நேற்று (19-ந் தேதி)காலைகாலமானார். இன்று காலை வேலங்காடு மயானத்தில் இறுதி சடங்கு நடந்தது. ஏராளமான கழகத் தோழர்கள் இறுதி அஞ்சலி செலுத்தினார்கள்.

## மறைவு

சென்னை, ஜன. 20— சென்னை 79-வது வட்டம் சக்தி நகர் எம்.ஜி.ஆர். மன்ற செயலாளர் கி. கோவிந்தன் துணைவியார் ஆர். புஷ்பா இன்று அதிகாலை 3 மணிக்கு காலமானார் இறுதிச்சடங்கு இன்று மாலை 5 மணிக்கு நடக்கிறது.

## லாட்ஜில் இளம்பெண் பிணம்: நகைக்காக நடந்த கொலையா?

சென்னை, ஜன. 20— சென்னை சிந்தாதிரிப் பேட்டை நரசிங்கபுரம் தெருவிலுள்ள லாட்ஜ் ஒன்றில் கடந்த 17ந்தேதி பகல் 12-30 மணிக்கு குமார் (25) என்பவர் ஒரு இளம் பெண்ணுடன் வந்து (மனைவி என்று கூறிக்கொண்டு) அறை எடுத்துத் தங்கினாராம், அறை வாடகைக்கு அட்வான்சாக ரூ. 60 குமார் கொடுத்ததாகத் தெரிகிறது.

இன்று காலை லாட்ஜ் ரூம் பாய் அறைக்குச் சென்றபோது குமார் தங்கியிருந்த அறை வெளியே பூட்டப்பட்டிருந்தது. ஆனால் ஜன்னல் ஒன்று திறந்திருந்தது ஜன்னல் வழியாக பார்த்த ரூம் பையன் அறைக்குள் குமாருடன் வந்த இளம் பெண் பிணமாகக் கிடப்பதைக் கண்டு லாட்ஜ் பொறுப்பாளர்களிடம் கூறியுள்ளான், அவர்கள் உடனே போலீசுக்கு தகவல் தெரிவித்துள்ளனர். தெற்குபகுதிதுணைக் கமிஷனர் ராதாகிருஷ்ணன் தலைமையில் இன்ஸ்பெகடர் சுப்பராயன் மற்றும் போலீசார் அறை பூட்டை உடைத்து அறைக்குள் சென்றனர்.

பிணமாக கிடந்த பெண் வாந்தி எடுத்த நிலையில் இறந்துள்ளார் மேலும் படுக்கையில் ரத்தகறை உள்ளது பெண்ணின் கையில் வெடிப்புகளும் கொப்புளங்களும் உள்ளன.

இதற்கிடையில் போலீசார் அங்கு கிடந்த சிறிய சீட்டு ஒன்றை எடுத்தனர். அதில் 'வடக்கன்குளம், நெல்லை மாவட்டம்' என்றிருந்திருக்கிறது. இளம் பெண்ணுடன் தங்கியிருந்த குமாரைக் காணவில்லை.

(1-ம் பத்தி பார்க்க)

(3-ம் பத்தி தொடர்ச்சி)

இந்தப் பெண் வரும்போது நகை அணிந்திருந்ததாகக் கூறப்படுகிறது. நகைக்காக இந்தக் கொலை நடந்திருக்கலாம் எனப் போலீசார் சந்தேகின்றனர்.

இந்தக் கொலை தொடர்பாக போலீஸ் நாய் வரவழைகக்கப்பட்டது. போலீஸ் நாய் கூவம் வரை மோப்பம் பிடித்துசென்று நின்று விட்டது. கைரேகை நிபுணரும் வரவழைக்கப்பட்டு 3, 4 கைரேகைகள் எடுக்கப்பட்டன.

இதற்கிடையில் நெல்லை மாவட்டம் வடக்கன் குளத்திற்கு போலீசார் விரைந்துள்ளனர். புலன் விசாரணை தொடர்ந்து நடந்து வருகிறது.

## ஆண் பிணம்

சென்னை பெரியமேடு பகுதியில் உள்ள ஒரு லாட்ஜில் 30 வயது மதிக்கத்தக்க ஆண் ஒருவர் மின் விசிறி கொக்கியில் தூக்குமாட்டிய நிலையில் பிணமாகத் தொங்கினார்.

அவரது பையில் இருந்த குறிப்பில் 'நடராஜ் ஸ்டோர்ஸ் வண்டிப் பெரியார் கோளா' என்று இருந்தது.

பிணத்தைக் கைப்பற்றிய பெரியமேடு போலீசார் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## இ. காங்கிரசிலிருந்து முன்னாள் ஆந்திர அமைச்சர்கள் ராஜினாமா

ஐதராபாத், ஜன. 20— ஆந்திர சட்டசபைத் தேர்தலில் இ. காங்கிரஸ் தோல்வியடைந்ததால் முன்னாள் இ. காங்கிரஸ் அமைச்சர்கள் கட்சியிலிருந்து ராஜினாமாசெய்துள்ளனர்.

முன்னாள் அமைச்சர் ஆர்.எம். அய்யப்புரெட்டி தனது ராஜினாமா கடிதத்தில் சட்டசபை தேர்தலில் கட்சியின் படுதோல்வியை தொடர்ந்து கட்சி தலைவர்கள் தங்களது பதவிகளில் இருந்து விலகுவதற்கு பதிலாக தங்களது பிடிப்பை நிரந்தரமாக்க தில்லு முல்லுகளினால் முயற்சிக்கிறார்கள் என்று குறிப்பிட்டுள்ளார்.

அதேபோல கிருஷ்ணா மாவட்ட செயலாளர்கள் ஸ்ரீராமமூர்த்தியும் பி. வி. நாகேந்திரராவும் ராஜினாமாவை அனுப்பி வைத்தனர்.

## லாட்டரி முடிவுகள்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி

முடியும் சீட்டுகளுக்கு.
7324 5887 0394
3359 2618

**7-வது பரிசு**
ரூ. 50 விதம்
கீழ்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு
0544 9714 6882
3674 9687 4777
9367 6620 3941
4278

**8-வது பரிசு**
ரூ 10 விதம்
கீழ்க்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு
318 799 982 691
537 447 538 711
740 793

### கே. வி. வரிசை

**முதல் பரிசு**
ரூ. 1 லட்சம்
9 1265
(வாணியம் பாடி)

**2-வது பரிசு**
ரூ10 ஆயிரம் விதம்.
894576
(குளித்தலை)
350977
(வேடசந்தூர்)

**3வது பரிசு**
ரூ 5 ஆயிரம் விதம்—
322446
(சேலம்)
573650
மயிலாடு துறை

**4-வது பரிசு**
ரூ ஆயிரம் விதம்:-
227059 133482
255828 443717
366623 841901
634954 367935
767057 782206
673880 085381
987666 859726
997926 440237
957751 186872
428045 385676
745494 187887
460727 244482
321531 929280
953897 258631
484563 237939
819530 282937
625958 623518
952470 559973
597560 601197
859039 984675

**5 வது பரிசு**
ரூ. 500 விதம்
கீழ்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு
78780 28178
00436 81191
75825

**6 வது பரிசு**
ரூ. 100விதம்
கீழ்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு:—
8177 6320 5576
8633 7630

**7-வது பரிசு**
ரூ 50 விதம்

கீழ்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு:—
8500 0721 1055
2838 9188 1442
8678 0169 1852
1125

**8-வது பரிசு**
ரூ 10 விதம்
கீழ்கண்ட எண்களில் முடியும் சீட்டுகளுக்கு
799 529 379 630
852 659 627 067
805 588

## ராதாபாய் உண்ணாவிரதம் நின்றது

பாண்டிச்சேரி, ஜன. 20— புதுவை முன்னாள் அதிகாரி ராதாபாய் உண்ணாவிரதத்தை நிறுத்திக் கொண்டார்.

புதுவை தி. மு. க. முதல்வர் டி. ராமச்சந்திரன் மீது ராதாபாய் சில புகார்களைக் கூறி நடவடிக்கை எடுக்கக் கோரி இருந்தார், நடவடிக்கை எடுக்காததால் அவர் உண்ணாவிரதம் இருந்தார்.

தக்கநடவடிக்கை எடுக்க முன்பு தமிழக கவர்னராக இருந்த பிரபுதாஸ் பட்வாரி உத்தரவிட்டிருந்தார்.

பின்பு நடவடிக்கை எடுக்காததால் 43 நாட்களுக்கு முன்னதாக பாண்டிச்சேரியில் மீண்டும் உண்ணாவிரதம் தொடங்கினார். பட்வாரி உத்தரவைச் செயல்படுத்த வற்புறுத்தினார்.

தற்கொலைக்கு முயன்றதாக ராதாபாயை புதுவை அரசு கைது செய்தது. சிகிச்சைக்காக புதுவை மருத்துவ மனையில்அவர் சேர்க்கப்பட்டார்.

இன்று புதுவை மாநில கழக செயலாளர் பி. கே. லோகநாதன் ராதாபாயைச் சந்தித்து உண்ணாவிரதத்தை நிறுத்தும்படி கேட்டுக் கொண்டார். உங்கள் கோரிக்கை நிறைவேற எங்களால் முடிந்தவற்றை செய்கிறோம் என்று லோகநாதன் கூறி, அவரிடம் பழரசம் கொடுத்தார். 43 நாட்களுக்குப்பின் பழரசம் குடித்து இன்று உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டார் ராதாபாய்.

## புதுவை அரசைகண்டித்து அனைத்துக் கட்சியினர் 2000பேர் உண்ணாவிரதம்

பாண்டிச்சேரி, ஜன 20- புதுவை அரசின் என். ஜி ஓ எதிர்ப்பு நடவடிக்கைகளைக் கண்டித்து பி கே. லோகநாதன் தலைமையில் அனைத்துக் கட்சியைச் சேர்ந்த 2 ஆயிரம் பேர் உண்ணாவிரதம் இருந்தனர்.

புதுவை அரசின் ஊழியர் விரோதப் போக்கு, நிர்வாகச் சீர்கேடு, லஞ்ச ஊழல் ஆகியவற்றைக் கண்டித்து அனைத்துக் கட்சியினர் உண்ணாவிரதம் இருக்க முடிவு செய்தனர்.

அண்ணா சிலையிலிருந்து ஊர்வலமாக 5 ஆயிரம்பேர் புறப்பட்டனர்.

சட்டசபை முன் 2 ஆயிரம்பேர் உண்ணாவிரதம் இருந்தார்கள்.

கழகத்தின் சார்பில் பி. கே லோகநாதன் மற்றும் உத்தரவேலு (ஜனதா), குருசாமி (கம்யூனிஸ்ட்), வீரபத்திரன் (மார்க்சிஸ்ட்), விநாயகம்(கா.கா,தே.கா) ராமச்சந்திரன் எஸ்.காங்கிரஸ் ஆகியோர் உட்பட 2 ஆயிரம் பேர் உண்ணாவிரதம் இருந்தனர்.

கம்யூனிஸ்டு தலைவர் வி. சுப்பையா உண்ணாவிரதத்தை தொடங்கி வைத்தார். எம். ஏ. சண்முகம்(கழகம்) வாழ்த்துரை வழங்கினார்.

பின்னர் மாலையில் ஜனதா கட்சி தலைவர் சுப்பிரமணிய படையாச்சி உண்ணாவிரதத்தை முடித்து வைத்தார். அனைத்துக் கட்சித்தலைவர்களும் பேசினர்.

---

சென்னை மாநகராட்சி மூலம்

## வரிபோடாமல் மக்களுக்கு வசதி செய்து தருகிறோம்

அமைச்சர் குழந்தைவேலு பெருமிதம்

சென்னை, ஜன. 20- சென்னை மாநகராட்சி மூலம் புதிதாக வரிபோடாமல் இருக்கும் பணத்தைவைத்து மக்களுக்கு வசதி செய்து கொடுக்கிறோம் என்று அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.



சென்னை கே. கே. நகரில் உள்ள நவபாரத் குடியிருப்பு வீட்டுவசதி சங்கத்தின் சார்பில் நடைபெற்ற பொங்கல் விழாவில் கலந்துகொண்டு உள்ளாட்சித்துறை அமைச்சர்குழந்தைவேலு பேசினார்.

அவர் கூறியதாவது:-

இங்குள்ள அங்கத்தினர்கள் யாவரும் வீட்டு வரியை உடனடியாகக் கொடுப்பதற்குத் தயார் நிலையில் இருப்பது கண்டு நான் பெருமையடைகிறேன். நாங்கள் இதுவரை மக்களுக்குப் புதிய வரிகள் போடவில்லை. வரியைப் பெருக்காமல் வசதியை மட்டும் பெருக்குவது தான் எங்கள் குறிக்கோள். சென்னை மாநகராட்சியின் ஆண்டு வருமானத்தில் பணியாளர்கள் சம்பளம் போக எஞ்சியிருப்பது கொஞ்சமே. இதனை வைத்துக் கொண்டு அடிப்படை வசதிகளைப் பெருக்க இயலாது என்று எண்ணித்தான் தற்போது மாநகராட்சியின் வருமானத்தைப் பெருக்க முதல்வர் புரட்சித் தலைவர் திட்டங்கள் தீட்டி வருகிறார்.

மேலும் இப்பகுதியில் உள்ள சாலைகள் சரியில்லைஎன்றும் இதனால் பல்லவன் போக்குவரத்துக் கழக வண்டிகள் நிறுத்தப்படுமோ என்று பயப்படுவதாகக் கூறினீர்கள். இருப்பினும் அந்த அளவிற்கு பயம் தேவையில்லை. போக்குவரத்து வசதிகள் தடைபடாத அளவுக்கு பார்த்துக் கொள்வோம். இங்குள்ள வீடுகள் பழுது பார்க்கப்பட வேண்டும் என்றார்கள். அதற்குரிய நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

### தொகை

சென்னை மாநகரின் மக்கள் தொகை 35 லட்சம். ஆனால் அதில் வரி கொடுப்பவர்கள் 20 லட்சம் பேர்தான். மீதி உள்ளவர்கள் குடிசைப் பகுதியில் வாழ்கின்றார்கள். சென்னை நகரில் மட்டும் மொத்தம் 1428 குடிசைப் பகுதிகள் உள்ளன. சென்னையிலுள்ள மக்கள் தொகையில் மூன்றில் ஒருபங்கு குடிசை வாசிகள்.

எனவே இதுபோன்ற நிலைமைகளை நீக்கி மாநகராட்சி சரிவர செயல்படுவதற்கு உண்டான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இங்குள்ள சாலைகள், விளக்குகள் இன்னும் ஒரு மாத காலத்தில் சீர்திருத்தி அமைக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு பேசினார். இவ்விழாவில் பா. வளர்மதி, கிருஷ்ணமூர்த்தி, துரையரசன், நா. காமராசன் ஆகியோரும் பேசினார்கள்.

கர்நாடக சட்டசபை

## இ.காங்கிரஸ் தலைவராக வீரப்பமொய்லி தேர்வு

பெங்களூர், ஜன. 20- கர்நாடக சட்டசபை இந்திரா காங்கிரஸ் கட்சித் தலைவராக முன்னாள் நிதி மந்திரி வீரப்பமொய்லி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இக்கூட்டத்தில் மத்திய மந்திரி பூட்டாசிங், ஜாபர் செரீப், முன்னாள் முதல்வர் குண்டுராவ்ஆகியோர் கலந்து கொண்டனர்.

## கால்நடை மருத்துவக் கல்லூரி முத்தமிழ் விழா

சென்னை, ஜன. 20— வேப்பேரியிலுள்ள, கால்நடை மருத்துவக் கல்லூரியில் முத்தமிழ் விழா நடந்தது.

சட்டமேலவைதுணைத் தலைவர் புலவர்புலமைப்பித்தன் விழாவிற்கு தலைமை வகித்தார். அமைச்சர் கே. ஏ. கே. விழாவில் கலந்து கொண்டு நிறைவுப் பேருரையாற்றினார். போட்டிகளில் கலந்து கொண்டு வெற்றி பெற்ற மாணவ - மாணவியருக்கு அவர் பரிசுகள் வழங்கினார்.

உயர் போலீஸ் அதிகாரி ரவி ஆறுமுகம், நடிகர் சிவச்சந்திரன், மாணவர் விடுதி செயலாளர் ஜான் பிரிட்டோ, மாணவர் தலைவர் நா. திருநாவுக்கரசு, செயலாளர் கே. மாரிமுத்து, மதியழகன், கல்லூரி முதல்வர் வி. எம். ராமசாமி, தமிழ்ப் பேராசிரியர் செயராசு நத்தானியல் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டு பேசினர்.

முன்னதாக விழாவிற்கு வந்த அனைவரையும் தமிழ்ப் பேரவை செயலாளர் இரா.சொரிமுத்து வரவேற்றார். எஸ்.அசோக்குமார் நன்றி கூறினார்.

---

ஜனவரி-25

## வீரவணக்க நாள் பொதுக்கூட்டம்!

சேலம்:
மாண்புமிகு பொன்னையன்

தஞ்சாவூர்:
மாண்புமிகு கோமதிசீனிவாசன்

## விவசாய உற்பத்திபெருக கழக அரசு நடவடிக்கை

# விவசாயத்திற்கு ரூ. 100 கோடி கடன்

## அமைச்சர் பொன்னையன் தகவல்

**சென்னை, ஜன. 20- விவசாயத்திற்கு குறுகிய காலக் கடனாக வரும் ஆண்டில் 100 கோடி ரூபாய் வழங்கப்படும் என அமைச்சர் பொன்னையன் கூறினா[ர்]**

வளரும் தமிழகம் என்ற தலைப்பில் அமைச்சர் பொன்னையன், வானொலியில் நிகழ்த்திய உரை வருமாறு:—

கூட்டுறவு எண்ணம் உலக அரங்கில் அரும்பு விட்டு ஏறத்தாழ 100 ஆண்டுகளுக்கு மேலாகி விட்டது. நமது நாட்டில் இவ்வியக்கம் தோன்றி ஏறத்தாழ 75 ஆண்டுகளுக்கும்மேல் ஆகிவிட்டது கூட்டுறவு இயக்கம் உலகின் பல்வேறு நாடுகளில் பல்வேறு அடிப்படை நோக்கத்தில் உருவாகியிருந்தாலும் நமதுநாட்டைப்பொருத்த வரையில் கூட்டுறவு இயக்கம் உழவர்களின் முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டே உருவாகி இருக்கிறது.

உழவர் பெருமக்களின் அடிப்படைத் தேவைகளை மட்டும் துவக்க காலத்தில், கவனிக்க முற்பட்ட கூட்டுறவு நிறுவனங்கள் இன்று உழவர்களுக்கு எல்லாவிதமான பணிகளையும் வழங்குகின்ற சேவை நிறுவனங்களாக இயங்கி வருகின்றன.

### 4700 வேளாண்மை பணிகூட்டுறவுசங்கம்

உழவர்களுக்கு உதவுவதற்காக இந்தப் பணியில் சுமார் 4700 வேளாண்மைப் பணிக் கூட்டுறவுச் சங்கங்கள் கிராம மட்டத்தில், குறுகியகாலமத்தியகாலக் கடன்களை உழவர் பெருமக்களுக்கு வழங்கி வருகின்றன.

1981-82ல் விவசாயத்திற்கு குறுகிய கால கடன் 72 கோடியும், நடப்பு ஆண்டில் ரூ. 82 கோடியும் வழங்கப்பட்டுள்ளன.

வரும் ஆண்டில் ரூ. 100 கோடி கடன் வழங்கத் திட்டமிடப்பட்டுள்ளது. அதைப் போலவே மத்திய காலக் கடன் வரும் ஆண்டில் 12 கோடி ரூபாய் வழங்க திட்டமிடப் பட்டுள்ளது.

உழவர்களுக்குப் பயிர் செய்வதற்கு கடன் தருவதோடு மட்டுமல்லாமல் உரம், பூச்சி மருந்து, உழவுக் கருவிகள், விதைகள் மற்றும் வேளாண்மைத் தொழிலுக்குத் தேவையான இடுபொருள்களையும் கூட்டுறவு நிறுவனங்கள் வழங்கி வருகின்றன.

தமிழகத்தைப் பொருத்த வரையில் தமிழகத்தில் உள்ள மொத்தவிவசாயக் குடும்பங்களில் 70 சதவிகித வேளாண்மைக் குடும்பங்கள் கூட்டுறவு நிறுவனங்களில் சேர்ந்து பயன்பெற்றுவருகின்றன.

குறைந்த, நில உடைமைகள் உள்ள சிறிய, மிகச் சிறிய விவசாயக் குடும்பங்களைச் சேர்ந்த 64 சதவிகிதம் நலிந்த பிரிவினர்கள் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாககடன் மற்றும் பிற வசதிகளைப் பெற்று முன்னேறி வருகிறார்கள்.



### ஆதிதிராவிடர்கட்கு சலுகை

சமுதாயத்தில் நலிந்த பிரிவினருக்கு மட்டுமின்றி தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்த விவசாயப் பெருங்குடி மக்களுக்கும் கூட்டுறவு நிறுவனங்கள் கடன் உதவி மற்றும் பிற உதவிகளும் செய்து வருகின்றன. சென்ற ஆண்டு தாழ்த்தப்பட்ட வகுப்பினைச் சேர்ந்த சுமார் 40,000 குடும்பங்கள் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்க்கப்பட்டார்கள். 31-3-1985-க்குள் தாழ்த்தப்பட்ட பிரிவுகளைச் சேர்ந்த மேலும் 60,000 வேளாண்மைக் குடும்பங்களைக் கூட்டுறவு இயக்கத்தின் கீழ்கொண்டு வருவதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டு வருகின்றன. இதற்காக இதுவரை புரட்சித் தலைவரின் அரசு அங்கத்தினர்களுக்கு பங்கு தொகை மானியமாக ரூ. 60 லட்சம் வழங்கியுள்ளது.

இந்திய ரிசர்வ் வங்கியின் கருத்துப்படி மொத்தக் கடன் தொகையில 20 சதவிகிதம் நலிந்த பிரிவினருக்கு வழங்கப்படவேண்டும். ஆனால் தமிழகத்திலுள்ள கூட்டுறவு நிறுவனங்கள் வழங்கிய மொத்தக்கடன் தொகையில் சுமார் 60 சதவிகிதத்துக்கு மேல் நலிந்த பிரிவினரின் முன்னேற்றத்திற்காக வழங்கப்பட்டது ஒரு சாதனையாகும் இது நலிந்த பிரிவினரின் நலனில் கூட்டுறவு நிறுவனங்கள் காட்டிவருகின்ற அக்கறைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு என்றே சொல்லலாம்.

"வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்" என்று வள்ளலார் குறிப்பிட்டதைப் போல உழவர்களின் சிரமங்களை அறிந்து கடனைத் திருப்பிச் செலுத்த முடியாத உண்மை நிலையினை உணர்ந்த, முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் உள்ள இந்த அரசு, 120 கோடி ரூபாய் அளவுக்கு பல்வேறு வகைப்பட்ட கடன்களை ரத்துச் செய்து, உழவர் பெருமக்களுக்கு சலுகைகளை வழங்கியுள்ளது. மேலும் உழவர்கள் சார்பில் வங்கிகளுக்கு 80கோடி ரூபாய் வழிவகைக் கடனாக கொடுத்துள்ளது. ஆகமொத்தம் 200 கோடி ரூபாய் அளவிற்கு சலுகைகளைப் புரட்சித் தலைவர் அரசு இதுகாறும் வழங்கியுள்ளது.

### நகை ஈட்டுக்கடன்

கடன் நிவாரணச் சட்டம் நிறைவேற்றப்பட்டு செயல்படுத்தப் பட்டதன் காரணமாக தனியாரிடமிருந்து கடன் வசதி கிடைக்காமல் இருந்த இடை வெளியை மாற்ற, நிறுவன ரீதியாக நகையீட்டுக் கடன் வழங்கும் பணியில் கூட்டுறவுச் சங்கங்கள் தீவிரமாக முனைந்துள்ளன. கடந்த ஆண்டில் சுமார் 150 கோடி ரூபாய் அளவுக்கு நகையீட்டுக்கடன் வழங்க திட்டமிடப் பட்டுள்ளது. இதன் மூலம் குறைந்த வட்டியில் அதாவது 14 சதவிகிதத்தில் 5000 ரூபாய் வரை ஒருவர் நகைக்கடன் பெற வழிவகை செய்யப்பட்டுள்ளது.

உழவர் பெருமக்களில் மலைப்பகுதியில் வாழ்கின்ற பழங்குடி மக்களில் பெருமளவு இடைத்தரகர்களின் கொள்ளை லாபத்திற்கு ஆட்பட்டு சிரமப்பட்டு வந்தார்கள். இருண்ட அவர்களது வாழ்வில் ஒளி ஏற்றும் வண்ணம் 13 பெரும் பல்நோக்குக் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டு மலைவாழ் மக்களுடைய துயர் தற்போது நீக்கப் பட்டுள்ளது.

உரம், பூச்சி மருந்துகள் மற்றும் பிற வசதிகளை வழங்குதல் போன்ற இந்தப் பணிகளில் தமிழகத்தில் 115 கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் ஈடுபட்டுள்ளன.

### 11 ஆயிரம் கிராம கூட்டுறவு அங்காடிகள்

நமக்கு உணவளிக்கும் உழவர் பெருமக்களுக்கு உதவும் வண்ணம் தமிழகத்தில் 11,100 கிராமக் கூட்டுறவு அங்காடிகள் செயல்பட்டு வருகின்றன.

சிறுதொழில் மற்றும் குடிசைத் தொழில்களை மேற்கொண்டுள்ள நலிந்த பிரிவினருக்கு அரசு மானியத்துடன் 4 சதவிகிதம் வட்டிக்கு உழவர் பணிக் கூட்டுறவு சங்கங்கள் மற்றும் நகர வங்கிகள் கடன் வழங்க வசதிகள் செய்யப்பட்டுள்ளது.

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்றார் நூற்றாண்டு கவிஞர் பாரதியார். அதைச்சற்று விரிவாக்கி உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம். நம் உயர்வுக்கு கூட்டுறவுசிந்தனை செய்வோம்" என்று நாம் செயல்படுவோம்.

கூட்டுறவுச் சங்கம் எளியவர்களால் இல்லந்தோறும் ஒளிவிட ஏற்றி வைத்த அகல்விளக்காகும் அந்தவிளக்குதொடர்ந்து ஒளி தர வேண்டுமானால் கூட்டுறவுச் சங்கங்களின் செயல்முறைகளை ஊக்குவித்து அதைப்பாதுகாப்பது நமது தலையாய பொறுப்பாகும். கூட்டுறவு என்பது கிராமப் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஒரு ஒளி விளக்கு! அதை அணையாமல் காப்பது உழவர் பெருமக்களின் தலையாய பொறுப்பாகும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

---

புரட்சித்தலைவர் பற்றிய

## கட்டுரை போட்டியில் வென்றவர்களுக்கு ஏப்ரல் 14-ல் பரிசளிப்பு

**சென்னை, ஜன. 20- புரட்சித்தலைவ[ர்] பற்றிய கட்டுரை, கவிதைப் போட்டியில் வெற்றி பெற்றோருக்கு ஏப்ரல் 14 ல் பரிசளிக்கப்படும் என்று முசிறிப்புத்தன் தெரிவித்துள்ளார்.**

இளைஞர் அணித் தலைவர் முசிறிப்புத்தன் எம் எல் ஏ தெரிவித்துள்ளதாவது:-

புரட்சித்தலைவரைப் பற்றி சிறந்த கட்டுரை, கவிதைகளுக்கு பொற்கிழி வழங்கும் எழுத்தாளர்கள் போட்டியில் சுமார் 6,000 இளைஞர்கள் கட்டுரைப் போட்டியிலும், 3,000 இளைஞர்கள் கவிதைப் போட்டியிலும், பங்கு பெற்றிருக்கிறார்கள். புரட்சித்தலைவரின் பொற்காலம் குறித்து இத்தகைய ஆர்வத்துடன் பல்லாயிரம் பேர் பங்கு பெற்றது, குறிப்பிடத்தக்கது ஆகும்.



போட்டிக்கு வந்துள்ள நூல்களை ஆய்வு செய்வதற்கு தக்க நடுவர்களை வைத்து தேர்வு செய்ய வேண்டியுள்ளது. இந்தப் போட்டியின் முடிவுகள் மார்ச் முதல் வாரத்தில் அறிவிக்கப்படும்.

இதன் பரிசளிப்பு விழா ஏப்ரல் 14ம் தேதி நடைபெறும்.

கட்டுரை - கவிதைப் போட்டியில் பங்குபெற்ற புலவர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் எனது நன்றியையும். அவர்களுடைய சிறந்த முயற்சிக்கு பாராட்டுக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாறு முசிறிப்புத்தன் தெரிவித்துள்ளார்.

---

அமைச்சர் முன்னிலையில்

ஜனதாக்கட்சியைச்சேர்ந்த

## 150பேர் கழகத்தில் இணைந்தனர்

கோவை, ஜன. 20— கோவை மாவட்ட நரசிம்மபுரம்விஜயலட்சுமி பஞ்சாலையைச் சேர்ந்த ஜனதாக் கட்சி தொழிலாளர்கள் 150 பேர் அக்கட்சியிலிருந்து விலகி அமைச்சர் அரங்கநாயகம் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

இந்நிகழ்ச்சியில் கோவைத்தம்பி, எம்.எல்.ஏ., கோவை அண்ணா நம்பி, ஏ. எம். செயது முகமது, கோவிந்தராசு, கே.பி. ராஜு, அரங்கசாமி, கே. உசேன், பாலன், முன்னாள் எம். எல். ஏ. சண்முகம் ஆகியோர் உடன்இருந்தனர்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029

Editor: B. PARASURAMAN.

---

கிரிக்கெட்:

## பாகிஸ்தானிடம் இந்தியா மீண்டும் படுதோல்வி

ஐதராபாத் ஜன. 20— பாகிஸ்தானிலுள்ள ஐதராபாத்தில் நடைபெற்ற கிரிக்கெட்டில் இந்தியா மற்று மோர் தோல்வியை தழுவியது.

பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையே பாகிஸ்தானில் டெஸ்ட் போட்டிகள் நடைபெற்று வருகின்றன.

ஏற்கனவே இரண்டு டெஸ்டுகளில் இந்தியா தோல்வி கண்டு பாகிஸ்தான் வென்றுள்ளது. ஒன்று டிராவில் முடிந்துள்ளது.

4-வது டெஸ்ட் ஐதராபாத்தில் நடந்தது. இந்த டெஸ்டிலும் இந்தியா தோல்வி கண்டது.

ஒரு இன்னிங்ஸ் 119 ரன்கள் வித்தியாசத்தில் இந்தியாவை பாகிஸ்தான் தோல்வி அடையச் செய்துள்ளது.

பாகிஸ்தான் முதல் இன்னிங்சில் 581 ரன்கள் எடுத்தது.

இந்தியா முதல் இன்னிங்சில் 189 ரன்களையும், இரண்டாவது இன்னிங்சில் 273 ரன்களையுமே எடுத்தது.

---

அண்ணா பொதுத் தொழிலாளர்சங்கத்தின் முயற்சியால்

## வேலை இழந்த தொழிலாளிக்கு நஷ்டஈடு

சென்னை, ஜன. 20— சென்னை மயிலாப்பூர் 'மாடர்ன் டைப் செட்டர்' கம்பெனியில் இரண்டு ஆண்டுகளாக பணியாற்றி வந்த ஆர். வி. லட்சுமணன் திடீரென்று வேலை நீக்கம் செய்யப்பட்டார். இது குறித்து சென்னை மாவட்ட அண்ணா பொதுத் தொழிலாளர் சங்கம் நடவடிக்கை எடுத்தது.

அதன்விளைவாகலேபர் ஆபீசர் மோகன் முன்னிலையில் சங்கத் தலைவர் சுப்பிரமணி பேச்சு வார்த்தை நடத்தினார். வேலைநீக்கம் செய்யப்பட்ட ஆர். வி. லட்சுமணனுக்கு அந்த கம்பெனியிலிருந்து 1200 ரூபாய் நஷ்டஈடாக வாங்கிக் கொடுக்கப்பட்டது.

---



நகர்ப்புற வளர்ச்சி குறித்த கவுன்சிலின் 20-வது கருத்தரங்கில், மத்திய வீட்டு வசதி அமைச்சர் பீஷ்ம நாராயண் சிங்கை தமிழக தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தம் சந்தித்தார்.

---

'இந்து' நாளிதழ் தலையங்கம்:

## தமிழக அரசின் அரிசி கோரிக்கையை டெல்லி ஏற்க வேண்டும்

**சென்னை, ஜன. 20— தமிழக அரசின் அரிசி கோரிக்கையை மத்திய அரசு ஏற்க வேண்டும் என்று இந்து நாளிதழ் தலையங்கத்தில் எழுதியுள்ளது.**

தமிழகத்தின் அரிசி தேவைபற்றி இந்து தலையங்கத்தில் கூறியிருக்கும் விவரம் வருமாறு:—

கடந்த ஆண்டு ஜூலை முதல் தேதி முதல் இலவச சத்துணவுத்திட்டம் தமிழகத்தில் அமல் படுத்தப்பட்டுள்ளது.

அதன்படி இரண்டு முதல் 10 வயது வரை கிராமப்புறத்துக் குழந்தைகளுக்கு சத்துணவு வழங்கப்படுகிறது.

இதன் இரண்டாவது கட்டம் செப்டம்பர் 15-ம் தேதியில் இருந்து செயல்பட்டு வருகிறது. நகர்ப்புறங்களில் ஏழைக் குழந்தைகளுக்குச் சத்துணவு வழங்கப்படுகிறது.

இல்லாமையில் இருக்கும் 65.76 லட்சம் குழந்தைகளுக்கு இந்த திட்டத்தின் மூலம் சத்துணவு வழங்கப்படுகிறது.

ஆதரவற்ற முதியோர்க்கும் சத்துணவு வழங்கப்படும் என்று முதல்வர் 4 மாதங்கட்கு முன்பு உறுதி அளித்து இருந்தார்.

தமிழகத்தில் ஏறத்தாழ இரண்டு லட்சம் ஆதரவற்ற முதியோர் அரசு உதவிப் பணம் பெற்று வருகின்றனர்.

இவர்களில் ஆதரவற்ற விதவைகள் இருக்கிறார்கள். உடல் ஊனமுற்றோர் உள்ளனர்.

இவர்களுக்கும் மதிய உணவு வழங்கப்படும் என்று முதல்வர் கூறி இருந்தார்.

### அரிசி தேவை அதிகரிப்பு

இப்படிப்பட்ட ஆதரவற்ற முதியோர்க்கு உதவித் தொகையோடு வாரம் ஒரு கிலோ அரிசியும் இலவசமாக தரப்பட்டு வந்தது. இதில் பாதி அளவு அரிசி குறைக்கப்பட்டு அதற்குப் பதில் பகல் வேளை உணவு வழங்கப்படுகிறது. தினமும் 200 கிராம் அரிசி உட்பட மற்ற உணவுப் பொருட்களும் வழங்கப்படுகிறது. இப்படிப்பட்ட நிலைமைகளால் தமிழக அரசுக்கு அரிசி தேவை அதிகரித்துள்ளது.

இந்த நல திட்டத்திற்கு மட்டும் மாதம் ஏறத்தாழ 18 ஆயிரம் டன் அரிசி கூடுதலாகத் தேவைப்படுகிறது.

தமிழகத்தைப் பொருத்த வரை அரிசி நிலைமை சிறிது மார்ஜின் உள்ள நிலைதான்.

இந்தநிலையில்இப்படிப்பட்ட திட்டத்தை அமல் நடத்தி வருவது பெரும் பிரச்னையாகும்.

பருவ மழை பொய்த்திருக்கிறது. உணவு உற்பத்தி பாதித்துள்ளது. இதனால் பொது விநியோக முறையில் அரிசி வழங்குவதும் பெருஞ்சுமையாக உள்ளது.

இந்தச் சூழ்நிலையை சமாளிக்க மத்திய கையிருப்பிலிருந்து அரிசி ஒதுக்கித் தரும்படி தமிழக அரசு மத்திய அரசைக் கோரியுள்ளது.

ஆனால் இந்தக் கோரிக்கை பற்றி மத்திய அரசின் பதில் தெளிவாக வரவில்லை. ஆனால் மத்திய அமைச்சர்கள் தமிழகத்தை பட்டினியால் வாட விடமாட்டோம் என்றுசொல்லி வருகிறார்கள்.

மத்திய கையிருப்புக்கு தமிழகம் அரிசி தரவில்லை என்று காரணத்தை சொல்லி வருகிறார்கள்.

இந்த வாதங்கள் எதிர் வாதங்கள். டெல்லிக்கும், தமிழகத்திற்கும் இடையே இருந்தாலும் இந்த மாபெரும சத்துணவு திட்டம் நடைபெறுவது முக்கியம் என்பதைப் பார்க்க வேண்டும்.

'தமிழகமாக இருந்தாலும சரி, ஆந்திரமாக இருந்தாலும் சரி அரிசி இன்றி கஷ்டப்படவிடக்கூடாது.

இவ்வாறு இந்து தலையங்கத்தில் எழுதப்பட்டு உள்ளது.

---

## வெளிநாடு செல்லும் இ. காங். எம். பி.கள்: தகவல் தரவேண்டும்

### மத்திய அமைச்சர் கோரிக்கை

**புதுடெல்லி, ஜன. 20- வெளிநாடு செல்லும் இ. காங்கிரஸ் எம். பிக்கள் தமது அமைச்சகத்துக்கு முன் கூட்டியே தகவல் தெரிவிக்கவேண்டுமென்று பார்லிமெண்டரி விவகார அமைச்சர் பீஷ்மநாராயண்சிங் கேட்டுக்கொண்டிருக்கிறார்.**

வெளிநாடு போகும் போதெல்லாம் அமைச்சகத்துக்கு தகவல் தெரிவிக்குமாறு இ. காங்கிரஸ் எம். பிக்களை மத்திய பார்லிமெண்டரி விவகார அமைச்சர் பீஷ்ம நாராயண் சிங் கேட்டுக் கொண்டிக்கிறார்.

அவர் இ. காங்கிரஸ் எம். பி.க்களுக்கு சுற்றறிக்கை ஒன்றை அனுப்பியிருக்கிறார். பார்லிமெண்டில் முக்கியமான அலுவல் கவனிக்கப்பட வேண்டியிருக்கும் போது சபையில் கட்சி உறுப்பினர்கள் ஆஜராக இருக்கும் பொருட்டு அவர்களுடன் தொடர்பு கொள்வதில் சமீப காலத்தில் சங்கடங்கள் ஏற்பட்டதாக அமைச்சர் சுற்றறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

அரசு ஏற்பாட்டின் மூலம் தூதுக் குழுக்களை அனுப்பும் சந்தர்ப்பங்களில் எம். பி.க்களின் வெளிநாட்டுப் பயணம் குறித்து தகவல் அறிய வழி ஏதும் தற்போது இல்லை. எம். பி.க்கள் தங்களது வெளிநாட்டு விஜயம் பற்றி அமைச்சகத்துக்கு தகவல் தெரிவித்தால் அவர்கள் எங்கிருக்கிறார்கள் என்பதைக் கண்டறிய முடியும். அதே சமயம் அவர்களுக்கு ஏதாவது உதவி தேவைப்பட்டால் அதை அரசு அளிக்க முடியும் என்று பீஷ்ம நாராயண்சிங் குறிப்பிட்டார்.

---

எரி சாராயத்துக்கு

## வரி குறைப்பு: அரசு அறிவிப்பு

சென்னை, ஜன. 20— தமிழ்நாட்டிலிருந்து வெளி மாநிலங்களுக்கு அனுப்பப்படும் எரி சாராயத்துக்கு தமிழக அரசு வரியை குறைத்துள்ளது.

இதுகுறித்து அரசு உத்தரவில் கூறப்பட்டிருப்பதாவது:-

தமிழ் நாட்டிலிருந்து வெளி மாநிலத்திற்கு ஏற்றுமதியாகும் எரிசாராயத்திற்கு, குடிப்பதற்கு என்றாலும், தொழிற்சாலைக்கு என்றாலும் அதற்கான உற்பத்தி வரி குறைக்கப்பட்டு லிட்டருக்கு 50 பைசா வீதம் விதிக்கப்படுகிறது.

இதேபோல டிநேச்சர்டு ஸ்பிரிட் என்ற சாராயத்துக்கும் வெளிமாநிலத்திற்கு ஏற்றுமதியாகும் போது "வெண்டு பீஸ்" குறைக்கப்பட்டு, லிட்டருக்கு 25 காசாக நிர்ணயிக்கப்படுகிறது. இந்த வரி குறைப்புகள் ஜூன் 30 வரை இருக்கும்.

இவ்வாறு அரசு உத்தரவில் கூறப்பட்டுள்ளது.

---

### மறைவு

சென்னை 108-வது வட்டத்திலுள்ளபுரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். சமூகநல மன்றத்தின் துணைத்தலைவர் டி.எம். ராகவனின் அன்னையார் கண்ணம்மாள் கடந்த 18-ந்தேதி அன்று இயற்கை எய்தினார்.



சென்னையில் மத்திய அமைச்சர் வசந்த்சாத்தே முதல்வர் புரட்சித்தலைவரைச் சந்தித்துப் பேசினார்.

# கஞ்சா கடத்தி ரூ 61 லட்சம் சுருட்டிய மாஜி முதல்வர்

## அரசாங்க விமானத்தில் நடந்த கள்ளக் கடத்தல் விவரம்

போபால், ஜன. 20- கஞ்சா கடத்தி ரூ. 61 லட்சம் சுருட்டியதாக மத்தியபிரதேச முன்னாள் முதல்வர் சக்லேச்சா மீது புகார் கூறப்பட்டுள்ளது.

மத்திய பிரதேச முன்னாள் முதல்வர் சக்லேச்சா தற்போது பாரதிய ஜனதாக் கட்சித் தலைவர்களில் ஒருவராக உள்ளார்.

இந்தியாவை ஜனதாக் கட்சி ஆண்டு கொண்டிருந்த காலத்தில சக்லேச்சா மத்திய பிரதேச முதல்வராக இருந்தார்.

1978 ஜூன் 29ல் இவர் அரசு விமானத்தில் கஞ்சாவை நேபாளத் தலைநகரான காத்மாண்டுவுக்குக் கடத்தினாராம்.

அரசு விமானத்தில் கடத்தப்பட்ட கஞ்சாவின் அளவு 3 லாரி நிரம்ப இருக்குமாம்.

இவற்றை அங்கே கடத்திக் கொண்டு போய் சுத்திகரிக்கப்பட்ட கஞ்சா, அபின்களை அவர் போபால் நகருக்கு கொண்டு வர ஏற்பாடு செய்தாராம். இதன் மூலம் ரூ. 65 லட்சம் அவர் சம்பாதித்ததாகவும் அதில் ரூ 31 லட்சத்தை காத்மாண்டு நகரிலுள்ள ஒரு வங்கியில் போட்டு வைத்திருப்பதாகவும் மத்திய புலனாய்வுத் துறை விசாரணையில் தெரிய வந்துள்ளதாம்.

இது பற்றி சக்லேச்சாவிடம் கேட்டபோது எனது அரசியல் எதிரிகள் எனக்கு எதிராக கிளப்பி விட்ட வதந்தி இது என்றார், இந்த புகார் மட்டத்தனமானது விஷமத்தனமானது என்றும் அவர் குறிப்பிட்டார்.

வெளிநாட்டு பாங்கில் நான் பணம் போட்டிருந்தால் அதை பறிமுதல் செய்து கொள்வதுதானே என்று அவர் கேட்டார்.

தி.மு.க. கிளை கலைப்பு

## 24 பேர் கழகத்தில் சேர்ந்தனர்

சென்னை, ஜன. 20— ஸ்ரீபெரும்புதூரை அடுத்த பீமன் தாங்கல் கிராமத்தில் கிளைக் கழக துவக்க விழாவும், கொடியேற்று விழாவும் சோமன் தலைமையில் நடந்தது.

செங்கற்பட்டு மாவட்ட கழகசெயலாளர் மோகனரங்கம் கழகக் கொடியை ஏற்றிவைத்து சிறப்புரையாற்றினார்.

பொதுக்குழு உறுப்பினர் பிள்ளைப்பாக்கம் மூர்த்தி, போந்தூர் மணி, வி. மூர்த்தி, குமாரவடிவேலு, கோதண்டராமன், சந்தானம், பூபதி, லோகநாதன், நடராசன் மற்றும் பலர் பேசினர்.

விழாவில் தி. மு. க. கிளையைக் கலைத்து விட்டு 24 பேர் மோகனரங்கம் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

## அமைச்சர் ஆர். எம். வீ நிகழ்ச்சிகள்

அமைச்சர் ஆர். எம். வீ. நிகழ்ச்சிகள் வருமாறு:—

20-ந் தேதி சேந்தமங்கலம் (சேலம்), தண்டாயுதபாணி கோவில் விழா.

மாலை 6 மணி-சேலம் திரையரங்குதிறப்புவிழா.

21-ந் தேதி- சென்னை.

22-ந் தேதி- மாலை புதுக்கோட்டை குடியரசு தின விளையாட்டுப் போட்டி நிறைவு விழா.



# தமிழ் நாட்டில் ரூ. 600 கோடி செலவில் இரு பாசன திட்டங்கள்

## அமைச்சர் ராசாமுகமது பேட்டி

திருச்சி, ஜன. 20- காவிரி பாசனப் பகுதியை நவீனப் படுத்தும் ரூ. 400 கோடி திட்டத்திற்கும் வெள்ளக் காலத்தில் வரும் தண்ணீரை வறண்ட பகுதிகளுக்கு திருப்பி விடும் ரூ.200 கோடி திட்டத்திற்கும் அனுமதி தருமாறு மத்திய அரசிடம் தமிழகஅரசு கோரவுள்ளது.

திருச்சியில் அமைச்சர் ராசாமுகமது நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

காவிரி நீர் பிரச்னை பற்றி டெல்லியில் அடுத்து நடக்க இருக்கும் கூட்டத்தில் காவிரி டெல்டா பகுதியை நவீனப்படுத்தும் திட்டத்திற்கு தமிழகம் அனுமதி கோரும்.

இதை தாமதப்படுத்தக் கூடாது என்றும் தமிழகம் கோரும்.

காவிரி டெல்டா பகுதியை நவீனப்படுத்த உலக வங்கி உதவியுடன் செயல்படுத்தப்படும் ரூ. 400 கோடி திட்டத்திற்கு உடனடியாக அனுமதிதருமாறுமுதல்வர் புரட்சித்தலைவர் கோருவார்.

### காவிரி மேம்பாடு: உலக வங்கி திட்டம்

காவிரி டெல்டா பகுதியை நவீனப்படுத்த தமிழகம் தயாராக இருக்கிறது.

இதுகுறித்து உலகவங்கியுடன் பேச்சுவார்த்தை நடத்தியுள்ளது. காவிரி நீர் பிரச்னையில் தீர்வு காண கால தாமதம் ஆகி வருவதால் இத்திட்டமும் காலதாமதமாகி வருகிறது.

வைகை, பெரியாறு, தாமிரபரணி ஆளியாறு, காவிரி ஆகியவற்றின் வெள்ளத் தண்ணீரை ரூ. 250 கோடி செலவில்சேமித்து வறண்ட பகுதிகளான புதுக்கோட்டை, கிழக்கு முகவை மாவட்டங்களுக்கு திருப்பி விடும்



திட்டம பற்றியும் பரிசீலித்து வருகிறோம்.

ஆண்டுதோறும் இப்படி வெள்ளகாலங்களில் சுமார் 5 ஆயிரம் கோடி கன அடி நீர் வீணாக கடலில் போகிறது.

83—84ம்ஆண்டில் சிறு, நடுத்தர பாசன திட்டங்கள் மூலம் ஒரு லட்சம் ஏக்கர் நிலத்தை பாசனத்திற்குக் கொண்டு வர அரசு உத்தேசித்துள்ளது.

காவிரி நீர் பற்றிய பேச்சுவார்த்தை அடுத்த மாதம் நடக்கக் கூடும்.

இவ்வாறு அமைச்சர் ராசாமுகமது தெரிவித்தார்.

## கவிஞர் முத்துலிங்கம் நூல் வெளியீடு

பெங்களூர், ஜன. 20— திரைப்படப் பாடலாசிரியர் முத்துலிங்கம் எழுதிய "ரோஜா தோட்டத்து ராஜகுமாரன்" நூல் வெளியீட்டு விழா பெங்களூர் விவேக் நகர் ஏசுபாலர் தேவாலயத்தில் நடைபெற்றது.

விழாவுக்கு அருள் ஜோசப் தலைமை ஏற்றார்.

அருள்திரு பாலையா வரவேற்றுப் பேசினார்.

நூலை திரைப்படக் கதாசிரியர் நாகை தருமன் வெளியிட்டார், கவிஞர் மணிமொழி, செங்குட்டுவன் ஆகியோர் வாழ்த்துரைத்தனர்.

தேவாலயத்தின் சார்பில் கவிஞர் முத்துலிங்கத்துக்கு பொன்னாடை அணிவிக்கப்பட்டுபாராட்டிதழும் படித்தளிக்கப்பட்டது,

பாராட்டுக்கு நன்றி தெரிவித்து முத்துலிங்கம் பேசினார்.

## அசாம் தேர்தல்: 630 பேர் மனுதாக்கல்

கவுகாத்தி, ஜன. 20— அசாம் மாநில தேர்தலில் மொத்தம் 630 பேர் வேட்புமனு தாக்கல் செய்துள்ளனர்.

அசாம் மாநில சட்டமன்றத்தின் 126 இடங்களுக்கு 600 பேர் மனு தாக்கல் செய்துள்ளனர்.

நாடாளுமன்ற தொகுதிகள் 12-க்கு 30 பேர் போட்டியிட மனு தாக்கல் செய்துள்ளனர்.

இந்த இடங்களில் வாக்குப் பதிவு பிப்ரவரி 14, 17, 20தேதிகளில் நடைபெறுகிறது.

காய்கறி பயிரிட

## 200 பேருக்கு ரூ. 2.7 லட்சம் கடன் உதவி

திருச்சி, ஜன. 20— புதுக்கோட்டை மாவட்டத்தில் பொன்னமராவதி, திருவரங்குளம் பஞ்சாயத்து யூனியன்களில் 2 கூட்டுறவு சங்கங்களை அமைத்து காய்கறி உற்பத்தியைப் பெருக்க அரசு திட்டமிட்டுள்ளதாக மாவட்ட கலெக்டர் கவுரிசங்கர் தெரிவித்துள்ளார்.

இந்தக் கூட்டுறவு சங்கங்கள் மூலம், 200 சிறுவிவசாயிகளுக்கு 2 லட்சத்து 70 ஆயிரம் ரூபாய் கடனுதவி அளிக்கப்படும் எனவும் உற்பத்தியாகும் காய்கறிகள் குழந்தைகள் சத்துணவுத் திட்டதிற்குபயன்படுத்திக் கொள்ளப்படும் எனவும் கலெக்டர் கவுரிசங்கர் கூறினார்.

தேர்தல் கமிஷன் உத்தரவு:

## அசாம் தேர்தலில் ராணுவத்தை பயன்படுத்தாதீர்

புதுடெல்லி, ஜன. 20— அசாம் மாநில சட்டமன்றத் தேர்தலில் ராணுவத்தை நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ பயன்படுத்தக் கூடாது என்று தேர்தல் கமிஷன் உத்தரவிட்டுள்ளது.

மத்திய அரசுக்கும், அசாம் மாநில அரசுக்கும் இந்தஉத்தரவை தேர்தல் கமிஷன் பிறப்பித்துள்ளது.

பத்திரிகை தடைச் சட்டத்தையும் தவறாகப் பயன்படுத்தக்கூடாது என்றும கூறப்பட்டுள்ளது.

தலைமைத் தேர்தல் கமிஷனர் ஆர்.கே. திரிவேதி இதற்கான உத்தரவுகளைப் பிறப்பித்துள்ளார்.

## மதுரை இளவரசன் நிகழ்ச்சிகள்

ஜனவரி- 20, 21, 22 திருச்சி, 23, 24- சென்னை, 30-மதுரை (10-வது வட்டம்)

# சத்துணவு திட்டநிதி முதல்வரிடம் குழந்தைவேலு மூலம் ரூ. 11 லட்சம்

சென்னை, ஜன. 20— சத்துணவுத் திட்டத்திற்கு முதல்வர் புரட்சித் தலைவரிடம் உள்ளாட்சித்துறைஅமைச்சர் குழந்தைவேலு மூலம் ரூ. 10 லட்சத்து 79 ஆயிரம் வழங்கப்பட்டது.

ஊரக வளர்ச்சித் துறை ஊழியர்கள் நெடுஞ்சாலை கிராமப் பணி ஊழியர்கள் ஆகியோரின் சார்பில் சத்துணவுத் திட்டத்திற்கு நிதி வழங்கப்பட்டது.

நெடுஞ்சாலை கிராமப் பணி ஊழியர்கள் சார்பில் முதல்வர் புரட்சித் தலைவரிடம் அமைச்சர் குழந்தைவேலு 2 லட்சத்து 17 ஆயிரத்து 167 ரூபாய் 80காசு வழங்கினார்.

ஏற்கெனவே ஊரக வளர்ச்சித்துறை மூலம் 8 லட்சத்து 62 ஆயிரத்து 650 ரூபாய் 80 காசுகள் வழங்கப்பட்டன.

புரட்சித்தலைவரிடம் சத்துணவுத் திட்டத்திற்கு அமைச்சர் குழந்தைவேலு மூலம் மொத்தம் ரூ. 10 லட்சத்து 79 ஆயிரம் இதுவரை வழங்கப்பட்டுள்ளது.